உ

குக். சுர்.

ஸ்ரீ ரமண சற்குருபகவான் சேவடி வாழ்க.

## ஸ்ரீ ரமண

# தோத்திர சோடசம்.





இது

ஆனைங்கூர்

அ. நடேசமுதலியாரவர்களால்

இயற்றப்பெற்று,

அண்ணாமங்கலம்

ஸ்ரீநிவாஸப்பிள்ளை குமாரர்

S. சேஷப்பிள்ளை அவர்களால்

பல அன்பர்களுதவிபெற்று,



விழுப்புரம்

ஹநுமான் அச்சியந்திரசாலையில்,

பதிப்பிக்கப்பட்டது.

1927.

Registered.] [Price Re. 0—1—0.

ஓ
தத். சத்.
ஸ்ரீ ரமண சற்குருபகவான் சேவடிவாழ்க.

# ஸ்ரீ ரமண
# தோத்திர சோடசம்.

---

இது
ஆறுங்கூர்
அ. நடேசமுதலியாரவர்களால்
இயற்றப்பெற்று,

அண்ணமங்கலம்
ஸ்ரீநிவாஸப்பிள்ளை குமாரர்
S. சேஷப்பிள்ளை அவர்களால்
பல அன்பர்களுதவிபெற்று,



விழுப்புரம்
ஹநுமான் அச்சியந்திரசாலையில்,
பதிப்பிக்கப்பட்டது.
1927.

---

[Registered.] [Price Re. 0—1—0.

ஸ்ரீ

ஸ்ரீ சற்குரு துணை.

# ஸ்ரீ ரமண ஸ்தோத்திர ஷோடசம்.

---

## பாயிரம்.

### நேரிசை வெண்பா.

பூமேவு மாறிப் பொருந்துங் கணந்தொறுமி
யாமேவு காரியங்க ளியாவுக்குந்—நாமேனி
சாட்சியாய் நின்றவனே தக்கதுணை மேலுமெமக்
காட்சியாய் செய்வா னறிந்து.

## நூல்

### பன்னிருசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

சீர்பூத்த தனிமுதற் குலதிலக மெனவளச்
சீகாழி தோன்றிபாமன்
திருமேனி தன்னிடத் தொளிரருட் சத்திமா
தேவிசே யெனுமுரிமையால்
வார்பூத்த தெங்கிளந் நீவிளி நிகர்த்தவிணை
வண்டனத் தமிழ்நினோடும்
வாழ்விக்கு மெய்ஞ்ஞான வாரமிழ்தி னைக்கூட்டி
வந்துமுன் னூட்டுநலனோற்
பேர்பூத்த சம்பந்த மூர்த்தியென வென்பினைப்
பெண்ணாக்க வலனோமறைப்
பெருங்காப் படைக்கவல னோசமண ரொடுவாது
பேசிகழு வேற்றவலனோ
கார்பூத்த நெஞ்சனேற் சோதிப்பி னின்னாள்
கதிக்குரிமை யின்றிமெலிவேன்
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைரம ணாநந்தனே. 1.

திருமேவு மார்பன் புரக்கின்ற மன்னுயிர்த்
திரவழியி லுய்வுகூட்டுஞ்
சீரியது சைவமா பேயென் றுணர்த்துமெய்த்
திருநாவி னரசென்னமா

தருமேவு மாதங்க மெஞ்சுவுங் கற்கும்பா
மொலிகடன் மிதப்பவுந்து
டுவந்நிற்றி னசைகுளிர வுஞ்செந் தமிழ்க்கவிக
ளோதவல் லவனேதனிக்

குருமேவு மாதுயிர்ப் பாங்கனு கவுமுத்தலை
கொண்டசே யுயர்வயதொடுங்
கூடியுயி ரெய்தவுஞ் செய்தகுங் கருணையைக்
கோநிறவ முயலவலனே

கருமேவு மேனையேற் சோதிக்க வெண்ணிலோ
கதியின்றி வீணிலழிவேன்
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறுந்த
வருணைரம ணநந்தனே. 2.

பண்ணுரு மறைசார வாசகம் பாடவம்
பலவாணர் வந்துநிட்டும்
பாக்கியம் பெற்றமா ணிக்கனென முகையைப்
பகாவைத் திடவல்லனே

வெண்ணுரு மறுவினைக ணெறிசிறிது மாறு
நியற்றிநிலை யந்தணசெனு
வெம்பிரான் றிருவருட் குரிமையாய் மெய்ப்போத
மெய்நிபுகழ் காட்டவலனே

தண்ணுரு மடியார்க ளடிசேவை சால்பெனத்
தழுவுநீ லக்கண்டன்போல்
தற்கனி யெனக்கற்பி னெழுகுகுல மகளாணை
தாங்கியிவி விடவல்லனே

கண்ணார நீருகுத் துருகிலேற் சோதிக்கில்
கதிமார்க்க மெளிதிலுறுமோ
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறுந்த
வருணைரம ணநந்தனே. 3.

இல்லையென் னுவியற் பகையென்ன வண்பருக்
கில்லையுந் தாவல்லனே
விளையான்றன் குடிமாற னன்னவயன் முனைநெற்கொ
டின்மடைசெய் திடவல்லனே

கொல்லவுஞ் சிவவேட மெய்யென்ற மெய்ப்பொருட்
கோன்றிடம் பெறவல்லனே
கூறருந் தொண்டர்த் தொழானறல்லவன் புறகாக்
குறித்தவிறன் மீண்டன்போலோர்

தொல்லைவெண் கோவணை புயர்ந்திடப் பொருளொடுந்
துல்லைமேவு மமர்நீதிபோற்
றாயமல செறிகரித் தும்பிகுணி பத்தர்போற்
சுத்ததொண் டாற்றவலனே
கல்லைநிகர் நெஞ்சனே னென்றுசோ தித்திடக்
கருதிலோ வாழ்வொழிகுவேன்
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைரம ணானந்தனே. 4.

தெய்வன்முக கீற்றிடைப் பத்திபூண் டன்னான்
செருக்கையினு மன்புகாட்டுந்
தெய்வருணை வேனுநி சிலமு முறுப்பிற்
சிறந்தகண் ணறுபகலிலா
மொவ்வரிய பற்று விடந்தப்பு கண்ணப்ப
னொப்பபரி பாகநலனும்
உம்பல்பல சேர்ந்தீர்த்து நேர்படாச் சிவலிங்க
முள்ளன் பெனுங்கயிற்றுற்
செவ்வைபட வைத்ததோர் கலயனருள் வன்மையுந்
திருமணத் தன்றுமகளின்
செய்யசுரி குழலீந்த மானக்கஞ் சாறனார்
சிந்தைதெளி வும்வாய்த்தனே
கவ்வுமல காயனேற் சோதிப்பி னென்னுங்
கருத்திழந் தழிவதல்லால்
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைரம ணானந்தனே. 5.

ஒளிமருவு செந்நெலரி சிச்சோ றளிக்குநெறி
யொழுகுநா ளொன்றிலதுமண்
ணுற்றதப ராதமென் றூட்டிதுண் டிக்கவா
ளுருவுதா யன்னிகர்வனே
தெளிமருவு மைந்தெழுத் தாதிகுழ னிலைசேர்
திரத்தனே வானயன்போல்
செஞ்சசங் தனக்கட்டை யாயென் பரைக்கவல
தீரனே மூர்த்தியைப்போ
லளிமருவு தேன்மலர் தொடுத்திதல் விரதமா
வாயுளுந் தந்தமுருகற்
கரியருத் திரமோ துருத்திரப் பசுபதிக்
கற்பமுஞ் சமனுவனே

களிபெரு புன்மையெற் சோதிக்கி லாங்கோ
கதிந்துருக வல்லேனலன்
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைரம ணாநந்தனே. 6.

மூட்டிய நெருப்பிறங் கிச்சேரி நந்தன்போல்
முனிவரா யெழவல்லனோ
முகங்கண் டகக்குறிய தளிகுறிப் புத்தொண்டன்
மூதறிவு பெறவல்லனோ

வோட்டிய பசுக்கடம் பாற்கொடுசெய் பூசனைக்
கூறிழைத் திடுதந்தைகா
லுடனே துணிச்சண்டி யன்னசன் மார்க்கத்தி
னுறுதியெய் திடவல்லனோ

விட்டிய பொருட்களொடு முடலாவி யாண்டவற்
கினிதாக்கு மப்பூதிபோ
லிறைமேனி தீண்டியவு லூதைபோம் படிபூசு
மின்னீத்த நக்கனார்போல்

காட்டிய லகத்தெளிவி லேற்பினுஞ் சோதிக்கில்
கதியெய்து மாறுமாமோ
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைரம ணாநந்தனே. 7.

மிக்கசீர் நமிநந்தி போனீரி னாற்சுடர்
மிளிர்ப்பிக்க வுந்தூதான்
மேவுமா றேவினற் காணப்பொ ருதாவி
விடவுங் கலிக்காமன்போல்

தக்கசீர் நிரைகாக்க மூலன்போல் வேற்றுடல்
தரித்திடவு மாரூர்குளந்
தன்னைப் பெருக்கிமிக லமணர்கண் ணொளியறத்
தண்டிபோற் றன்கண் பெறவும்

நக்குசீர் சூதாலு மாகேசு ரப்பூசை
நன்மூர்க்கர் போற்செய்யவும்
நாளுமைந் தட்சரங் கருதிசோ மாசிபோ
னலமுறவும் வல்லேனலன்

கக்குசோ றுண்ணாய்க்கு மிழியன்சோ தித்திடக்
கத்தனிற் கொருபொருட்டோ
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைரம ணாநந்தனே. 8.

பாயாம னிரும் பசுங்கூழ் வளர்த்துய்ந்த
மங்கையர்க் கரசிபோலும்
மற்றதற் குதவுங் குலச்சிறைப் போலுமான்
மாதரப் பெறுபேயர்போல்
வாயார வாழ்த்துமா ரூரன்பிரி வாற்றாத
மாறாக் குறும்பன்போலும்
பழுவாது சிவலிங்க மீதெறிவோர் கல்வீசி
வந்தசாக் கியன்போலவும்
நயாத ரற்குரித் தியாகங்கள் செய்தருவி
மெய்சிறப் புலிபோலவும்
ஒருமக வரிந்திடு சிறுத்தொண்டன் போலவும்
உயர்நெறியி னொழுக வலனே
காயாத மாமன்ன வினையேற் சோதித்தல்
காலம்வீண் போக்கலாகுங்
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைராம னாநந்தனே. 9.

வெண்கண்ட னீறென் றுவர்ப்பொதி வணாற்பணிய
யேவுங் கழற்றறிகுளார்
வேண்டிவந் தார்த்தொண்டில் பயில்வித்த கணநாதன்
வீறுசிற் றம்பலமுளான்
றன்கண்ட வடிமுடி யிடப்பெற்ற கூற்றுவன்
சத்தியந் தோய்புலமையார்
சமரில்விழு தலையொன்றில் சடைகண்டு தீபுகுந்
தார்புகழ்ச் சோழன்சைவம்
மண்கண்ட வுயிரெலாம் பற்றவே யரசோச்சி
வந்தநர சிங்கமுனையார்
வருமீன் பரற்கீந் தினைத்தவதி பத்தர்போல்
மாதவர்கள் வழிவந்தனே
கண்கண்ட தெய்வமா நம்பினேற் சோதித்தல்
கதிதரற் கழகன்றுகாண்
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைராம னாநந்தனே. 10.

அடியாரி லொருவர்தம் முன்னடிமை யென்றுகண்
டவமறித் தாள்வனைக்கை
யரிகலிக் கம்பன்சி ருதிரசுட ரேற்றுமா
றுதுகளங் கலியனார்சீர்

அடியார வன்பர்களை நிந்தைசெய்யு மவர்தாந்
துணித்திடுஞ் சத்தியின்சீர்
தொல்லை னகந்தோறு மேவிவெண் பாவொன்று
சொல்லிபணி யையடிகள் சீர்
முடியார தீபத் தெரித்துமயி ரொளிதந்த
முனிவன்க ணம்புல்லன் சீர்
முதல்வனக மமைகாரி சீர்சற்று முன்னரோ
மோகமா தியபகையி னுங்
கடியாத பேதையேற் சோதிப்பி னையகோ
கதியின்றி நரகில்வீழ்வேன்
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைரம ணாநந்தனே. 11.

ஞானசம் பந்தனுப தேசமுற் றுயர்வீடு
நண்ணுநெடு மாறன்பேறும்
நாதனுக் கிதயவெளி யிடமாக்கு மாறுத
நார்வாயி லாரின்பேறும்
ஊனமென் றெண்ணாது போர்வினைசெய் தன்பருக்
குதவுமுனை யடுவர்பேறும்
உருத்திரற் கிடுபுட்ப மோந்தவட் கைதுணித்
தொழிகழற் சிங்கன்பேறும்
போனகந் தொண்டருக் கிடுநெறியி னுற்களவு
புரியவந் தான்வறுமையைப்
போக்கிடங் கழிபேறு மெய்யிடற் குரியனோ
பொய்ம்மருவு மஞ்ஞானமாங்
கானகம் பட்டனேற் சோதிப்பின் மெய்யாய்
கதிக்கருக மின்றியழிவேன்
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைரம ணாநந்தனே. 12.

காலமுந் தவறு தாற்பணிந் தேத்தியுட்
கசிவுறு செருத்துணையெனக்
கந்தனைப் பஞ்சத்து மர்ச்சித் தவன்றருங்
காசுறு புகழ்த்துணையெனு
வாலமுண் டாற்கென் றமைத்தநெற் கூட்டினை
யழித்தாரை வெட்டிசொர்க்கத்
தமர்வித்த கோட்புலியெ னுமென் குணமுத்த
ராய்பணிகு வாரெனுஞ்

சிலைபொன் றன்போடு பாணையே பாடுவார்
சிவனிடஞ் சித்தமானோர்
சிவகண மெனைச்சொலுங் கமலைவந் தவலினைச்
செய்தவ முனூற்றியுளரோ
காலையிற் கறைகும்வகை சோதிக்க வெண்ணமோ
கதியிலா தொழிவனறிவாய்
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைராம ணூநந்தனே. 13.

சிவலிங்க பூசனைக் குரியரா முப்பொருந்
திருமேனி தீண்டுவார்கள்
சிவாகமம் விதித்தபடி முழுதீ றணிந்தவர்கள்
சோழன்முதல் மூவேந்தரின்
றவமொன்று நாட்டின் புறத்திலுந் தொண்டர் தொகை
சாற்றிடற் குமுனும்பிரர்
தன்னருட் பெற்றவப் பாலுமடி சார்ந்தவர்கள்
தக்கபொரு ளில்லைமையா
னவமிஞ்ச நெஞ்சகக் கோலய மமைத்தசிவ
னன்னரிடச்செப்பூசலார்
நாடிசெய் புண்ணியத் தனுமேவுவு முள்ளரோ
நல்லார்க ளூறவுமின்றிக்
கவலொன்று மேழையேற் சோதித்த னியாயமோ
கதிதருவர் மற்றுமுண்டோ
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைராம ணூநந்தனே. 14.

வாக்குமன மெய்களின் செயல்யாவு மன்னால்பால்
வைத்தமடி யார்தமக்கு
வத்திரங் கோவணத் தொடுகீளு மீந்துவகை
மருவுரே சன்றனக்கு
னோக்கருஞ் செய்கைச் சிலம்பியாய் சிவனுக்கு
நுவலரும் பணிசெய்ததா
லாற்றிடும் மனிதப் பிறப்பெய்தி முன்ஞான
நடபத்தி ஞலப்பணிக்
கூக்கமெழ நற்கதிக் காளான செங்கணூர்க்
குற்றநல வில்லுரியினும்
ஒருபோதி லஞ்சே லொருங்கொழிவ துன்கவல்க
ளூநுதிபென் றதுபொயாமோ

காக்கின்ற கடனுனக் குண்டோமற் றில்லையோ
கணமுமினி யாற்றவொவ்வேன்
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைரம ணநந்தனே. 15.

அத்தனூர் புகழொன்று மட்டுமே யாமுனைத்
தனுறினமு நீலகண்ட
யாழ்ப்பாண னென்றான் முன்புபொற் பலகைமீ
தார்ந்திடும் பெற்றியுளனே
பத்தனு வுலகெலாம் போற்றிசெய் சுந்தரப்
பான்மையனை யிருந்தவாழும்
பற்றிலாச் சடையனு ரிசைஞானி யார்க்குள்ள
பக்குவமு நேர்ந்துள்ளனே
முத்தனு முன்னருட் பெற்றய்ந்த கந்தனொடு
முழுகால மும்பணிசெயும்
முநிரன்பு பழனியை யாசாமி யாதிபோல்
முற்பட வலேனுயினுங்
கத்தனு நம்பினேற் காப்பதுன் போன்றவர்கள்
கடனென்ப தறியாய்கொலோ
கருணைபுரி யாய்பந்த மருணைவுறு மாறந்த
வருணைரம ணநந்தனே. 16.

## துணிபுரை.

### நேரிசை வெண்பா.

நல்லாரை யுன்னினல னன்றுமென விந்நாளெ
னெல்லாரை யுந்துதிக்க வெண்ணினேன் - னல்லாரை
நாங்கள் புகழ்வதெலா நொய்தாகு மென்முறைக
ளேற்கா தொழியி னினி.

## வாழ்த்து

### கட்டளைக் கலித்துறை.

தண்ணம் பழுத்த வெனையாண்ட நாதன் றளிர்ப்பதமுந்
திண்ணம் பழுத்த வடியாரு மன்னர் சிறப்படைவா
னெண்ணம் பழுத்த வெனதாவன் மற்றிவ் வெழிற்றுதியும்
வண்ணம் பழுத்த விதையோது மன்பரும் வாழியவே.
ஸ்ரீ ரமண தோத்திர சோடசம் முற்றுப்பெற்றது.

ஸ்ரீ ரமணார்ப்பணம்.

சுபம்.

## அத்வைதாநந்தக் கீர்த்தனம்.

(ஸ்ரீ ரமணமஹர்ஷிகள் அருளியது).

"ஐயேமெத்தக்கடினம்" என்ற நந்தனார் கீர்த்தனை மெட்டு.

பல்லவி.

ஐயே அதிசுலபம் ஆன்மவித்தை
ஐயே அதிசுலபம்.

அநுபல்லவி.

நொய்யார் தமக்குமுளங் கையா மலகக்கனி
பொய்யா யொழியமிகு மெய்யா யுளதான்மா. (ஐ)

சரணம்.

1 மெய்யா நிரந்தரந்தா னையா திருந்திடவும்
பொய்யா முடம்புலக மெய்யா முளைத்தெழும்பொய்
மையார் நினைவணுவு முய்யா தொடுக்கிடவே
மெய்யா மிதயவெளி வெய்யோன் சுயமான்மா
விளங்குமே இருளடங்குமே இடரொடுங்குமே இன்பம்
பொங்குமே. (ஐ)

2 ஊனா ருடலிதுவே நானா மெனுநினைவே
நானா நினைவுகள்சே ரோர்நா ரெனுமதனா
னானா ரிடமெதென்றுட் போனா னினைவுகள்போய்
நானா னெனக்குகையுட் டானாய்த் திகழுமான்ம
ஞானமே இதுமோனமே ஏகவானமே இன்பத்தானமே. (ஐ)

3 தன்னை யறிதலன்றிப் பின்னையெ தறிகிலென்?
தன்னை யறிந்திடிற்பின் என்னை யுளதறிய?
பின்ன வுயிர்களில பின்ன விளக்கெனுமத்
தன்னைத் தனிலுணர மின்னுந் தனுள்ளான்ம
ப்ரகாசமே அருள்விலாசமே அகவிநாசமே இன்பவிகாசமே. (ஐ)

4 கன்மாதி கட்டவிழ சென்மாதி நட்டமெழ
வெம்மார்க்க மதனினு மிம்மார்க்க மிக்கெளிது
சொன்மா னததனுவின் கன்மாதி சிறிதின்றி
சும்மா வமர்ந்திருக்க வம்மா வகத்திலான்ம
சோதியே நிதானுபூதியே இராதுபீதியே இன்பம்போதியே. (ஐ)

5 விண்ணா தியவிளக்குங் கண்ணா தியபொறிக்குங்
கண்ணா மனக்கணுக்குங் கண்ணாய் மனவிணுக்கும்
விண்ணா யொருபொருள்வே றென்னா திருந்தபடி
யுண்ணா டுளத்தொளிரு மண்ணா மலையெனான்மா
காணுமே அருள்வேணுமே அன்புபூணுமே இன்புதோணுமே (ஐ)

குருபாதமே கதி.